# நள்ளிரவுப் பாடகன்



கவிஞர், இரா.நடராசன்,

# நள்ளிரவுப் பாடகன்

கவிஞர். இரா.நடராசன்.




திருமொழிப் பதிப்பகம்

# புத்தக வெளியீட்டுத் தகவல்

பெயர் : நள்ளிரவுப் பாடகன்

படைப்பாசிரியர் : கவிஞர் இரா. நடராசன்

வெளியிடுவோர் : திருமொழிப் பதிப்பகம்
சுங்கவாயில்
திருச்சி சாலை கரூர்-3

வெளியீட்டு வரிசை எண் : ஏழு

வெளியீட்டு நாள் : 15 - 8 - 1986

பதிப்பு : முதலாவது பதிப்பு

தாள் : தமிழ்நாடு காகித ஆலை
அச்சுத்தாள்

புத்தக அளவு : டபுள் கிரவுன் 1X16

எழுத்து : 10 புள்ளி

பக்கங்கள் : vi-121

விலை : ரூ. 10-00

அச்சகம் : திருமொழி அச்சகம்
செங்குந்தபுரம் மெயின் ரோடு
கரூர்-2

ஓவியம் : வெ. ராஜூ

பொருள் : சமூகச்சார்பான
புதுக்கவிதை

முதுபெரும் தமிழறிஞர்

# டாக்டர் சி. நயினார் முகம்மது

முதல்வர்

ஜமால் முகம்மது கல்லூரி, திருச்சி.

கவிஞன் பிறக்கிறான் என்பர்.
கவிஞர் நடராசன் பிறப்பில்
சிறப்பு உடையவர்.
நாவன்மையும், கட்டுரைத்
திறனும், கவிதை நலமும்
கொண்டவர். எங்கள்
கல்லூரியில் பயின்றபோது
அவரின் பன்முகத் திறமைகள்
பளிச்சிட்டன. தம் கற்பனை
அனுபவங்களைக் கவிதைகளாக
வடித்து தந்துள்ளார்.
"நள்ளிரவுப் பாடகன்"
என்னும் புதுக்கவிதை நூல்
இவர்தம் கன்னி முயற்சியாகும்
இவர்தம் கவிதைகள் கவிதை
நலம் மிகுந்து சுவை நலம்
தருவனவாகுக.
பலகவிதைகள்
படைத்தளிப்பாராக.

சி. நயினார் முகம்மது
முதல்வர்

# படைப்பா? விமரிசனமா?
## (இதோ... ஒரு புதுக்கணக்கு)

நள்ளிரவுப் பாடகன் - குரல் எங்கெங்கோ கேட்டதாக இருக்கலாம். குரலில் வடியும் பொருளும், திரும்பத் திரும்பக் காது கொடுத்துக் கேட்டதாக இருக்கலாம். சொற்பிழை, பொருட்பிழை, அச்சுப்பிழை என எப்பிழையை மன்னிப்பது? எதனை தண்டிப்பது? நக்கீரப் பார்வையிலிருந்து யாரும் எதுவும் தப்பிப் பிழைக்கவே முடியாது என்பது காலக் கோட்பாடு அகாலமரணம் நிகழ்வதைப் போல! போலச் செய்தல் (Imitation) ஒரு திறன் மட்டுமின்றி, ஒரு வாழ்வியல் நெறியும் கூட !!

நற்றிணை, குறுந்தொகை, அகநானூறு, அய்ங்குறுநூறு எல்லாம் ஒரே குரல், ஒரே வாய்பாடு, ஒரே சூத்திரம்-திரும்பத் திரும்ப வருவதை இலக்கணத்தில் அடுக்குதொடர், சொல்லணி அந்தாதி, மரபு என்று விதியாக வகுத்துப் போற்றி மகிழ்வர். மரபுக்கவிதையில் இடம் பெற்ற பொருளோடு, புதுக்கவிதைக்கு என்று புதிய செய்தியும் உண்டு. அது கிளிப்பிள்ளை நெறியில் இருந்த மரபிலக்கியப் பார்வையின் விலங்கை முறிப்பதாகவே கருதலாம். அந்தப் பாதையில் பாரதி தமிழைக் கண்டெடுத்தான் கொலம்பஸ் அமெரிக்காவைக் கண்டுபிடித்த மாதிரி! புரட்சிக்கவி பாரதிதாசனுக்கும் தமிழ் அமுதாக இனித்ததல்லவா? கவிஞன் பார்வைக்குத் தள்ளுபடியே இல்லை அதனால் கவிஞர் நடராசன் "காணவில்லை" என்று பாட முடிகிறது. அதனால் நக்கீரர் தன் பார்வையைக் குறைத்துக் கொள்ள வேண்டும்-'தள்ளுபடி' தவறாமல்!

நள்ளிரவுப்பாடகனின் அவலம், ஆவேசம், கிண்டல், கேலி, குத்தல், குழைதல் எல்லாம் கவிதையை வாழ வைக்கின்றன. வடிவமைத்த திருமொழி அச்சகர் படைத்தளித்த கவிஞரைப் போலவே தேவைகளை நிறைவேற்றி வைத்து தேசத்தின் புதுக்கணக்கில் பங்கு கொண்டுள்ளதைப் போற்ற வேண்டும்.

வழக்கம் போல் எமது ஏழாவது வெளியீட்டிற்கும் தமிழக அரசு போதிய ஆதரவு தந்து எல்லாக் கிளை நூலகங்களிலும் நள்ளிரவுப்பாடகன் குரல் எதிரொலிக்க வழிவகை செய்து உதவ வேண்டுகிறோம்.

**திருமொழிப் பதிப்பகம்.**

மன்னிக்க...

இவை
கவிதைகளல்ல ...
உரைவீச்சுகள் ! !



சமர்ப்பணம் !!

இனிய
வாசகனே ... !
இது
உனது
சிந்தனைக்கு ... !

## பணிவுடன் சமர்ப்பணம் !

நான்
பணிவுடன்
சமர்ப்பிக்கப்பட்டேன் !

அந்த இரவில்
இந்த உலகம்
மிகுந்தகவலையுடன்
இருந்திருக்க
வேண்டும்!

என்னை
ஏக்கத்தோடு
பெற்றுக் கொண்டது
இருட்டு !

என்னை
சமர்ப்பித்தத்
தாய்
கடமை முடிந்ததும்
உறங்கிப்
போனாள் !

நான்
புரட்டிப்
படிக்கப்படுகிறேன் !

காலம்
பரிசீலனை
செய்து கொண்டிருக்கிறது
இந்த
ஏழை மனுவை !

இவனின்
வேண்டுகோள்கள்
ஏற்கப்படுமா
அல்லது ...
மனுவே
தள்ளுபடி செய்யப்படுமா !

காலமே ...
நான்
பணிவுடன்
சமர்ப்பிக்கப்பட்டவன் !

## 'நான்' என்பவன் ... ...

தன் நிலை இழந்து
தோல்விக்கடலில்
நான்
எங்கோ
தொலைந்து விட்டபோது

என்னை
இவன் தான்
தேடிக் கொடுத்தான் !

துயரத்தோடு
போராடி
நெஞ்சில் கனக்கும்
வலியை
தாங்க முடியாமல்

நான்
ஓலமிட்டு
விடுகின்ற கண்ணீர்த்
துளிகளை எல்லாம்
இவன் தான்
கவிதையாக
மாற்றித் தருகிறான்

அக்கிரமங்களை
பார்க்கும் போதெல்லாம்
மனதை
கொதிக்க வைத்து
இவந்தான்
உள்ளத்தில்
எரிமலைகளை
உற்பத்தி செய்கிறான் !

தோல்வி
அடிக்கடி வந்து
செய்யும்
புன்னகைக்
கொலைகளிலிருந்து
என்னை
தேடியெடுத்து
இந்த
“நான்” எனும்
எனது நண்பன்தான்
என்னை
வாழ வைக்கிறான் !

## மேற்கிலே காத்திரு !

நண்பனே
நமது தேசம்
ஒருநாள்
திருந்திவிடும் !

நாம்
எழுதிக்குவிக்கும்
உயிரோட்டமுள்ள
கவிதை
பீரங்கிகளுக்கு
ஒருநாள்
விடைகிடைத்துவிடும்!

இந்த நாட்டில்
நமக்கும்
வேலைகிடைத்து
நாமும்
சிரிக்கப் போகிறோம் !



வறுமை
அப்போது
வலிமையை
இழந்திருக்கும் !

உனது
இந்தியஏழைத்
தோழன்
உண்டுகளித்து
புன்னகைக்கப் போகிறான்!

உழைப்புக்காக
ஊதியம்
என்கின்ற
நிலைவந்து
இலஞ்சம்தனது
இலட்சியத்தை
இழக்கப் போகிறது!

நண்பனே
உனது நாட்டின்
பெண்கள்
கைகளிலிருந்து
கரண்டிகள்
பிடுங்கப்பட்டு
தேவைப்பட்டால்
துப்பாக்கிகள்
தரப்பட்டிருக்கும்!

தமிழ்
தேசியமொழியாகி
ஒருநாள்
உலகமொழியாகவும்
ஏற்கப்பட்டிருக்கும்!

ஆனால்
அப்போதெல்லாம்
கிழக்கில்தான்
அஸ்த்தமனம் இருக்கும்
எனவே நண்பனே
நீ
மேற்கிலே காத்திரு
ஒருநாள்
விடிந்துவிடும்!

## களவு போனவை

என்னுடைய
கனவுகள்பல
களவு போய்விட்டன !

மலரே
களவாடப்பட்டிருந்தால்
பரவாயில்லை ...
மலரின்
மணம் மட்டும்
களவு போயிருக்கிறது !

ச்சீ ...
கேடு கெட்ட தேசம்
நடுஇரவில்
கள்ளர்கள்
கனவுகளைக்கூட
விடாமல்
களவாடிக் கொள்கிறார்கள் ! !

அரசனாய்
காதலனாய்
தலைவனாய்
தெய்வமாயும் கூட
பல வேடங்கள் ஏற்று

ஆண்டியாய்
கண் விழித்த போது
தெரிந்தது
என்னுடைய
கனவுகளில் பல
களவு போயிருக்கிறது !

திருடியவர்களே
தயவுசெய்து
தேடித்தாருங்கள்
நான் மீண்டும்
உறங்க வேண்டும் !



ஓ ...

சாகாத

# பிணங்கள்

(ஒரு அன்னையின் கண்ணீர்)



## சாகாத பிணங்கள்

காற்று மெல்ல
மேகத்தை தடவியபோது
பாவம்
அது கரைந்ததுபோல்
கசிந்துவிட்டது!

முரட்டுத்தனமாய்
குயிலொன்று
கூவிப்பிதற்றியது

தென்றல்
மேற்குக் கரையில்
நிலாவை
எதிர்பார்த்திருந்தது!

சிலஓடை
அலைகள் சலசலவென்று
கவிபாடிக்
கொண்டிருந்தன!

மாலையைத் துரத்தும்
சோகராகம்
அதோ
மாட்டுத் தொழுவம்
அருகே
கேட்கிறது !

நல்ல குரல் வளம்
வறுமையை
சோகத்தில் குழைத்து
வார்த்தைகளை
கண்ணீரில் கலக்கி
வெளிவரும்
ஒரு
துயர நாட்டின்
தேசியகீதம்!

மாலையைத் துரத்தும்
சோகராகம்
அதோ
மாட்டுத் தொழுவம்
அருகே
கேட்கிறது!

கண்ணீர்மூலாம்
பூசப்பட்ட
காப்பியச் சொற்கள் !

கற்பனை இல்லாது
பெண்மையின் குரலில்
மௌனமான
அந்த இசை
காதுகளிலும்
கண்ணீரை
வரவழைக்கிறது !

அதுஒரு
பெற்றதாயின்
அபயக்குரல் !
அந்தக்
கருவறைக்காட்டில்
இப்படிஒரு
பூகம்பமா ?

தாலாட்டுதான்
இருந்தாலும்
இந்த
ஆளாட்டு வித்தையை
அந்தகீதம்
எங்கிருந்து திருடியது!

மழலையை
கண்மூட வைக்கும்
குரலா இது?
ஓ ...
இது ஒரு
கதறல் கட்டளை !

மாலையைத் துரத்தும்
சோகராகம்
அதோ ... அந்த
மாட்டுத் தொழுவம்
அருகே கேட்கிறதே!
யாருக்காக ?

 இரா. நடராசன்

ஆரடிச்சு நீயழரே
அடிச்சாரை
சொல்லி அழுவென்று
குழந்தையை
தாலாட்டித் தானும்
அழுகிறாளே!

யாருக்காக
இந்த
வேதனை வேண்டுகோள்

சோற்றுக்காய்
தனது
வியர்வை முத்துக்களை
உழைப்பாய் சிந்தி
தாய்மை
சேர்த்த சில காசுகளை
குடிபோதைக்கு
கடத்தி
பட்டினிப் பரிசை
தனக்களித்த கணவனுக்காக

அந்த
ஆறறிவு
மிருகத்திற்காக
இந்தச்
சின்ன எரிமலை
இங்கே
சீறிக் கொண்டிருக்கிறது!

தாலியின்
கனத்தை தாங்க முடியாது
இந்த
தாய்மை
தவித்துக்கொண்டிருக்கிறது!

மாலையை
துரத்தும்
சோகராகம்
அதோ
மாட்டுத் தொழுவம்
அருகே
கேட்கிறது!

குட்டிச் சுவரோரம்
பிணமாய்
கிடக்கும் அந்த
சாராய வாடையில்
மூச்சு விடுகிற
உயிரில்லா ஜீவனுக்காக
கண்ணீர்த் துளிகள்
இங்கே
கவிதைகளாக்கப்படுகின்றன

இப்போதெல்லாம்
மாலையை
துரத்தும்
சோகராகங்கள்
மாட்டுத் தொழுவங்களில்
இப்படிக்
கேட்டுக்கொண்டே
இருக்கின்றன!



# ஒரு
# நள்ளிரவுப்
# பாடகன்!!

## நள்ளிரவுப் பாடகன்!

ஒரு பேனாவிற்கு
பைத்தியம் பிடித்திருந்தது!

புரட்சி புரட்சி
என்று
புலம்பிக்கொண்டிருந்தன
உதடுகள்!

கொடுமைகளை
பார்த்து
கண்ணீர்விட்டது
கற்பனை!

தேசம் கண்ட
கனவுகளுக்கும்
கால்கள் முறிந்தபோது...
அதோ
புறப்பட்டுவிட்டான்
ஒரு
நள்ளிரவுப் பாடகன்!

நள்ளிரவுப் பாடகன்



வெற்றி
பலருக்கும் வாய்க்கலாம்
தோல்வி
இவனுக்கு மட்டுமே
சொந்தமானது !

எப்போதும்
அதுவருவதை
எதிர்பார்த்திருந்து
இருகரங்களையும் விரித்து
அதற்காக இவன்
காத்திருக்கிறான் !



சொற்ப நேரம்
அதற்காக
வருந்துவான் !

ஆனல்
இவனுக்குத் தெரியும்
அதன்முடிவில்
நிறைய புன்னகையை
பூட்டி வைத்திருக்கிறது
தோல்வி !!!



அதனிடமிருந்து
விலகி ஓடாமல்
அதையே
நெருங்கிப்படித்தான்
அதுதான் வெற்றி !

ஒவ்வொருமுறை
தோல்வி வரும்போதும்
ஒவ்வொருமுறை
இறந்து போகிறான் !

ஒவ்வொருமுறை
இறந்து விடுகையிலும்
புதிதாய்
ஒருமுறை
பிறக்கிறான் !

எனவே
தோல்வி வரும்போதெல்லாம்
வெற்றியும்
அடைகிறான்!



வெற்றிக் குழந்தை
மெல்ல பிறப்பெடுத்து
வந்து
பிறப்பதற்குள்
கருவிலேயே அதனை
சிதைத்துவிடும்
தோல்வியின்
அகோரப்பசி
இவனுக்குப்
பழகிவிட்டது!



இப்போதெல்லாம்
இவனுடைய
பலத்திற்காக இவன்
பெருமைப்படுவதில்லை ...
பலவீனத்திற்காக
வருத்தப்படுவதுமில்லை



நள்ளிரவுகளில்
தேசம்
பகல் கனவு
காணுகறது!
உறங்குகின்றான்
இவனுடைய
இந்தியத் தோழன்

அவனுக்குப்
பகல்களும் இரவுகளாய்ப்
பழகிப்போயின!



தோல்விகளையே
தாலாட்டாக
எடுத்துக்கொண்டு
உறங்குகிறது
ஒரு
மகாத்மாவின் தேசம்

பட்டப்பகலில்
அதோ
புறப்பட்டுவிட்டான்
ஒரு
நள்ளிரவுப்பாடகன்!

தோல்விகளை
அதனால்
எழுந்த காயங்களை
கையில் எடுத்துக்கொண்டு
இந்தியத் தெருக்களின்
பகல் இருட்டுகளை
ஒளியேற்றி
உறக்கத்தை
உறங்கவைத்து
உதிரத்தை
கவிதைகளாகச் சிந்தி
ஒரு
தேசத்தை எழுப்ப
இதோ
புறப்பட்டு விட்டான்
ஒரு
நள்ளிரவுப் பாடகன்!

வெற்றி
பலருக்கும் வாய்க்கலாம்
தோல்வியெனும்
வெற்றி
இவனுக்கு மட்டுமே
சொந்தமானது!

**கூடப்பிறந்தவனே!**

உனக்கிருக்கும்
அறிவுக்கு நீ
வேறெங்கும் பிறந்திருந்தால்...
இந்நேரம்
உனது பெயர்
கின்னஸ் புத்தகத்தை
எட்டு முறையாவது
முத்தமிட்டிருக்கும்!

அந்தோ!
இந்த தேசம்
உன்னை
பரிசு விழாத
குலுக்கல் சீட்டாய்
அடுப்படிப் புகையில்
எரிந்து விட்டது!

உனது
திருமணத்தின்போது
உனது தந்தை
சொத்தை மட்டுமா
அழித்தார்?
உனது
கனவுகளையும்
சேர்த்துதான்!

உனது அன்னையின்
முட்டாள்த்தனமான
உபதேசத்தில்
உணர்வுகளை
அடக்கி
இந்த தேசத்தின்
சமையல் சாதனைகளை
தவறாமல்
செய்பவளே...

உனக்குத் தெரியுமா
உனக்கிருக்கும்
வலிமை?!
கிடுக்கிப் பிடிக்கும்
கரங்களால்
நாட்டையும்
பிடிக்க முடியும்!

கூடப்பிறந்தவனே...
புரட்சி என்கிற
புனிதத்தை
நீ
எப்போது
நடத்தப் போகிறாய்?




# என்
# துயரமிகு
# தேசமே...!

## மெல்ல பேசுங்கள்... !

யாரது...?
மெல்ல பேசுங்கள்
இங்கே
தூக்கம் நடக்கிறது !

நாங்கள்
கண்களை மூடிக்கொண்டே
பிறந்த கூட்டம்

சுதந்திரத்தைக்கூட
இரவில்
எங்களை எழுப்பி
இரவலாய்தான்
கொடுத்தார்கள் !!

மெல்லப்பேசுங்கள்
இங்கே
தூக்கம் நடக்கிறது!

இந்நாட்டின்
தேசிய கீதம் கூட
எங்களுக்குத்
தாலாட்டாகத்தான்
கேட்கிறது!
எங்கள்
காதுகள் அப்படி!!

அலுவலகங்களில்
கல்விக் கூடங்களில்
பேருந்துகளில் - ஏன்
சட்டசபைகளில்கூட...
உறக்கம்தான்
எங்கள்
வழக்கம்!

எனவே
மெல்லப்பேசுங்கள்
யாரங்கே!
அதற்குள்ளா
தூங்கிவிட்டீர்!!

## தேசியப் புரட்சி!

இங்கு நடக்கும்
புரட்சிகளை
பார்த்து
உலகமே புல்லரித்துப்
போயிருக்கிறது!

ஒரே தொகுதியில்
அய் நூறு
வேட்பாளர்கள்
போட்டியிட்டு
கின்னஸை
நிரப்பிவிட்டார்கள்!

நச்சு வாயுவால்
அய்யாயிரம்
பேரை மாய்த்து
மக்கள் தொகை
குறைப்புக்கு
புதிய பாதையை
காட்டிவிட்டார்கள்!

மாபெரும்
உலகத் தலைவியை
கொன்றவன்
இன்னும் உயிரோடு
பாதுகாக்கப்படுகிறான்!

வேஷக்கார
தலைவர்கள்
வேண்டுமென்றே
ஓய்வுக்காக
ஒதுங்கும்
சிறைச்சாலை வாசலில்
அப்பாவித் தொண்டர்களின்
தீக்குளிப்பு!

இப்படி
இங்கு நடக்கும்
புரட்சிகளைப் பார்த்து
உலகமே
புல்லரித்துப்போயிருக்கிறது!

அந்த நடு இரவில்!!

அவனுக்கு பசியெடுத்தது!
அப்போது
இருண்டிருந்தது!

குப்பை
தொட்டிகளில் கூட
நாய்களின்
'கியூ' வரிசை...

சாலையோர
காவிரியில்
பன்றிகளின்
ஓங்காரம்!

வானில்
இருட்டு மேகங்களின்
குருட்டுப் பயணங்கள்

அவனுக்குப்
பசி வலுத்தது
அப்போது
ஊர் துயின்றது!



இது
வெற்றிகரமான
இரண்டாவது
வாரம்!

பக்கத்துக் குடிசையில்
பாயொன்று
முனகிக்கொண்டிருந்தது!

என்ன உடலிது...
பெண்ணாகப்
பிறந்திருந்தால்
பேரமாவது பேசி
விற்கலாம்!
இப்படிப் பிறந்து...!



கால்கள் இமைத்தன!
கண்கள் செறுகின!
நெஞ்சம் துடித்து
நினைவு
தவித்தது!

வெகுநேரம்
குடல்களுக்குள்
யுத்தம்!

இறுதியில்
சிறுகுடல்வென்று
பெருகுடலை விழுங்க
உறங்கிப் போனான்
நிரந்தரமாக!

ஆனால்
அவனைச் சுற்றி
நாய்களின் அலறலும்
பன்றிகளின்
பரிசுத்தமான உறுமலும்
தொடர்ந்து கேட்டது!

அவனது வெற்றுடல்
சில்லிட்டு
விடிந்துவிட்டபோது...

வானொலி சொன்னது
இன்று
இந்தியா
சுதந்திரம் பெற்றுவிட்டது!

## இன்னொரு தேர்தல்!

இந்தியத் தாயே!
இன்று
உனது புகழை
இந்த தேசம்
அரசியல் மேடைகளில்
மானபங்கப்படுத்துகிறது!

உன்னுடைய
உடலிலிருந்து
உருவப்பட்ட
உடுப்புகள் எல்லாம்
மூலை முடுக்குகளில்
கட்சிக் கொடிகளாய்
பறக்கவிடப்படுகின்றன!

ஒலி பெருக்கிகளில்
தேர்தல் பிரச்சார
சந்தடியில்
ஈனமாய் அலறுகிறது
உனது குரல்!

சுதந்திரம்
கிடைத்தபோது
நீ கண்ட
கனவுகள்கூட
சாராய கடைகளில்
களவு போய்விடுகின்றன!
ஒவ்வொரு
சுவரிலும்
விதவையைப்போல்
உனது படம்
வரையப்படுகிறது
தேர்தல் சின்னங்களாய்!

மொத்தத்தில்
உன்னை
கற்பழிக்கிறது
தேசம்
ஒவ்வொருமுறை
தேர்தல்
வரும்போதும்!!

## நள்ளிரவில் நடந்தவை!

அதோ ஒரு தேசம்
அர்த்தராத்திரியில்
புரட்சி செய்து
கொண்டிருக்கிறது!

எங்கும்...
செக்கச் சிவந்த
திரவங்கள் ஓடுகின்றன!

அங்கங்கே!
தொழிலாளர்களின்
இதயக்குமுறலை
துப்பாக்கி வேட்டுகள்
எதிரொலித்தன!

முதலாளி வர்க்கம்
அதோ
மூலை முடுக்குகளில்
ஓடி ஒளிந்து
ஒண்டிக்கொள்கிறது!

காலனிக் கொடி
கொளுத்தப்படுகிறது
இதோ...
செந்நிறத்தில்
ஒரு
புனிதக்கொடி
மக்களின்
உள்ளத்தை வானிற்குச்
சொன்னது!

அதோ...
ஒரு தேசம்
அர்த்த ராத்திரியில்
புரட்சி செய்து
முடித்துவிட்டது!

புறப்படு தேசமே
நாமும்
புரட்சி செய்வோம்!

## நம்பிக்கைகள்!!

பட்டமளிப்பு விழா...
மூன்றாண்டு
கல்விப்பயணம்
முடிந்தது!

முப்பத்தியாறு மாதக் கரு
பட்டமாய்
பிறந்தது!

வேலை தேடுகிற
கருப்புப் பட்டாளத்தில்
தானாகவே
ஆள் குவிப்பு!

பட்டமளிப்பு விழா!
அதோ ஒரு
பட்டமளிப்பு விழா!

தேசத்தின்
எந்த
மூலையிலாவது
நமக்கு வேலை
கிடைக்குமா?
என்று
கருப்பு அங்கியோடு
பட்டங்கள்
தேசத்தை நம்பியிருக்க...

அமைச்சர்
மேடையில்
அழுத்திச் சொன்னார்...
"இந்தியாவின்
எதிர்காலம்
உங்களைத்தான்
நம்பியிருக்கிறது!"

**காணவில்லை!!**

தேடிக்கொண்டிருக்கிறோம்
இன்றும் கூட
தேடிக்கொண்டிருக்கிறோம்

நாற்பத்தியேழில்
ஆகஸ்டு பதினைந்தில்
ஏதோ ஒன்று
கிடைத்ததாமே?

கிடைத்ததும்
காணாமல் போனது!

அது
இறந்துகொண்டே
பிறந்த
பச்சைக்குழந்தை

தேசத்தின்
ஒவ்வொரு குடிமகனும்
அதைதான்
விடாமல் தேடுகிறான்!

ஒவ்வொரு ஆண்டும்
அது
தொலைந்த நாளை
மிட்டாய் கொடுத்து
கொண்டாட்டம் வேறு
நடக்கிறது!

முகவரியை எழுதி
பத்திரப்படுத்துவதற்குள்
அதை
போட்டிபோட்டுக்கொண்டு
எங்கோ
தொலைத்துவிட்டார்கள்

எங்காவது
அதைப் பார்த்தால்
தகவல் சொல்லாதீர்கள்
இலஞ்சத்தை கொடுத்தாவது
அதை மீண்டும்
தொலைக்கச் சொல்வார்கள்!

## ஒரு நேர்முகத் தே(சோ)ர்வு!

குமாஸ்தா வேலை...!
நேர்முகத் தேர்வு
நடந்துகொண்டிருந்தது

அவர் கேட்டார்
"கம்பனைத்தெரியுமா?"
தெரியுமென்றான்!

"காளிதாசனைத்
தெரியுமா?"
ஆமாமென்றான்!

"வள்ளுவனைத் தெரியுமா?"
குறளையே சொன்னான்!

"டால்ஸ்டாயைத் தெரியுமா?"
தெரியுமென்றான்!

அவர் சொன்னார்
“அப்படியானால்
இந்த
குமாஸ்தா வேலை
உனக்கெதற்கு?
வேறு
நல்ல வேலை
தேடிக்கொள்!!”

**புலம்பல்கள்!**

ஒரு வெங்காயம்
புலம்பியது!
“அட இரக்கமற்ற
மானிடனே
எனது தோலை
உரித்து கிழித்துவிட்டு
நீ
கண்ணீர்விடுகிறாயே!”

## சுதந்திர தினம்!

எங்கள் ஊர்
சுதந்திர தினம்!

மந்திரி வந்தார்!
மகாத்மா
சிலைக்கு ஒரு
மாலையிட்டார்
அந்த சாதனைக்காக
அவர் கழுத்தில்
ஒரு நூறு
மாலைகள்!

மக்கள் தலைவர்
கொடியேற்றினார்!

ஊரின் பெரியவர்
உயர்த்தி பேசினார்
-மந்திரியை!

அர்த்தம் தெரியாமல்
தேசியகீதம்
எல்லோராலும்
பாடப்பட்டது!

பள்ளிக்குழந்தைகள்
வண்ண வண்ண
உடைகளில்
ஊர்வலம் வந்தனர்!

இறுதியில்
எல்லோரும்
வீட்டுக்கு
மிட்டாயோடு
செல்ல...

வீதியில்
கொடி மட்டும்
அனாதையாய் பறந்தது!
என்
மக்களைப்போலவே!!!

# கருவறையிலிருந்து



காருவரை



கருவறை

ஒரு மாபெரும்
கதையின்
முன்னுரை இங்குதான்
எழுதப்படுகிறது!



மரணதண்டனை
அடையும் முன்
இங்கு
பத்துமாத
தற்கால சிறைவாசம்

நேரத்திற்கு
உணவு கிடைத்து. .
கவலை இல்லாத
வாழ்வின்
முதல் அத்தியாயம்!

உறக்கம்!
உறக்கம் மட்டுமே
இந்த
தொழிற்சாலையின்
ஊதியம்!

பிறந்தபின்
உறங்காமல்
அலையப் போகும்
அவலத்திற்காக
இங்கு
முன்னூறு நாள்
ஓய்வு!

அது
வாடகை இல்லாத
வீடு
அரசியல்
ஊடாத நாடு!

 நள்ளிரவுப் பாடகன்

இங்கு
காதலிக்க வேண்டாம்
கற்பனையோ
கவிதையோ சமைத்து
அலைய வேண்டாம்!

சிவப்புச் சுவர்கள்
தானே
கட்டிக் கொடுத்த
அழகான
சதைக்கூடு!

வாழ்வின்
இந்த பத்து மாதம்தான்
ரணம்!
கண்ணீர்விடுவதில்லை

ஒரு மாபெரும்
கவிதையின்
முன்னுரை இங்குதான்
எழுதப்படுகிறது!

## இறந்தே பிறந்தபோது!

நான்
இறந்தே பிறந்தபோது
ஒன்று புரிந்தது
இங்கு
யாருமே
உயிரோடு பிறப்பதில்லை!

நான்
மூடனாய்
பிறந்தபோது
தெரிந்தது!
இங்கு
யாருமே
மூளையோடு
பிறப்பதில்லை!

நான்
ஏழையாய்
பிறந்தபோது
புரிந்தது
இங்கு யாருமே
பணத்தோடு
பிறப்பதில்லை!

பெரும் பணக்காரர்கள்
கத்தைகளை மட்டும்
அடுக்கும்
அறிவுலக ஏழைகள்!

அறிவு ஜீவிகளோ
அடுத்த வேளைக்கு
அடுத்தவரை
தேடி ஓடிக்கொண்டிருக்கும்
பண உலகின்
பரமஏழைகள்!

பிறப்பிலும்
இறப்பிலும் மட்டும்
அறிவாலும்
அடங்கவைக்கும்
பணத்தாலும்
எல்லோருமே ஏழைகள்!

நான்
இறந்தே பிறந்தபோது
எனக்கு ஒன்று
புரிந்தது
இங்கு
யாருமே
உயிரோடு பிறப்பதில்லை!

## அழுதுகொண்டிருப்பதேன்?

அழாதே
பாப்பா
அழாதே நீ
நிறைய
அழவேண்டும்
உன்னுடைய கண்ணீரை
இப்போதே
செலவழித்துவிடாதே!

ஒருநாள்
பொழுதெல்லாம்
அழவேண்டும் நீ
இன்று
பொம்மைக்காய்
அழுகையை
வீணாக்காதே!

கல்வி கற்க
உன்னை
பெற்றவர்கள்
கண்டிப்போடு
அனுப்பும்போது...
அந்த புத்தகப்
பொதியை சுமக்க
அழப்போகிறாய் !

கல்லூரி
வாழ்க்கைக்கு
வரும்போது
இடம் கிடைக்காமல்
இந்த
தேசத்தின்
தெருக்களில்
வீசியெறியப்படுவாயே
அப்போது ஒருமுறை
அழப் போகிறாய் !

கல்லூரி வாழ்க்கை
முடிகையில்
உடன் படித்த
நண்பர்கள்
பிரிவுக்காய்
அழப்போகிறாய்!

வேலைத் தேடி
நீ
அலைந்து கொண்டிருக்கையில்
உன்னுடையப் பட்டம்
பாதி விலைக்குக் கூட
போகாத துயரத்தில் நீ
ஒருமுறை
கட்டாயம் அழப்போகிறாய்!

இளமை
உன்னை இன்முகத்தோடு
வரவேற்கும்!
அதன் நடுவில்
காதல்
இக்கட்டால் ஒருநாள் நீ
அழப்போகிறாய்!!

இன்னும்
மனைவிக்காக
மதத்துக்காக
பிள்ளை
நலத்துக்காக
இறுதி வரை
அழவேண்டும்...

அழாதே பாப்பா
அழாதே நீ!
நிறைய அழ வேண்டும்
கண்ணீரை
செலவழித்துவிடாதே!

நள்ளிரவுப் பாடகன்

## கற்றுந் தளர்ந்தவை!

வஞ்சம் இல்லாத
மனதை
மாற்றிடத்தான்
இங்கு
பள்ளிகள் வந்தன!

சாதியை
திருடும் விதத்தை
ஏமாத்தை
விதவிதமாய்
கற்றுத் தருகிறோம்!

கல்வியா இது
கடப்பாறை நீச்சல்!
கல்வியா இது
கனவுக் காட்டாறு!

அன்று
குழந்தைப்பருவத்தில்
பூச்சிபிடித்து
விளையாடியவன்

இன்று
கல்விக்காக
தவளைபிடிக்கிறான்!

சொப்பு வைத்து
விளையாடியவன்
இன்று
'சோக்கு' வைத்து
விளையாடுகிறான்!

பூப்பரித்து
விளையாடியவன்
இன்று
பூப்படித்து
விளையாடுகிறான்!

அன்று...
அடுப்புவைத்து
விளையாடியவன்
இன்று
அதன்மேல்
குடுவை வைத்து
விளையாடுகிறான்!

கல்வியா இது
கண்ணாம்பூச்சி
விளையாட்டு!

கல்லூரி
கல்வியின்
தூக்கு மேடை
இங்கு
காசுகள் செய்வதை
நூல்கள்
செய்வதில்லை!!

## வேலை தேடும் வேலை!

இங்கு
எட்டாம் வகுப்பையும்
எட்டிப் பார்க்காத
பேட்டை ராஜ்யங்களுக்கு
ஏசியறைக்குள்
அமைச்சர் பதவி...

கல்லூரியும் முடித்து
கால் வயிற்றுப் பசியும்
கனவிலும்
வேலை கிடைக்காத
தகுதிக்கு...
மாதம் அய்ம்பது
தபாலில் பிச்சை

இந்த தேசத்தின்
வாக்காளர் பட்டியல்
தொன்னூறு சதவிகிதம்
வேலைவெட்டியில்லா
வீணர்கள் கூட்டம்தான்!

கனவிலும்
நினைக்காத
கூட்டம்
நாடாளு மன்றத்தில்
தேசத்தின் மானத்தை
ஏலத்திற்கிடுகையில்
கல்லூரிப் படிப்பில்
கனவுகளை சுமந்தோர்
எட்டணா காசுக்கு
எடுபிடிகள் ஆகிறோம்!

காதல்

அவனுடைய சுதந்திரம்
பறிபோய்விட்டது!
இன்று
அவனுடைய சுதந்திரம்
பறிபோய்விட்டது!

மெல்லத்தான்
நோக்கினாள்
அவளது
மேலிதழ்தான்
சிரித்தது!

சன்னமாய்
ஒரு நொடிதான்
அதுவும்
சின்னதாய்
ஒரு பார்வை...

அவனுடைய சுதந்திரம்
பறிபோய்விட்டது
அதில்
அவனுடைய சுதந்திரம்
பறிபோய்விட்டது!

சுவையாக
அப்போதுதான்
சுதந்திரமாய்
சோஷலிசம்
பேசிக்கொண்டிருந்தான்

ஒரு வினாடிப்
பார்வையில்
அடிமையானான்!

நேற்றுவரை
தன்னை
நேசித்தவன்,
இனி
அவளுக்காகவே
உடுத்தி
அவளுக்காகவே
மூச்சையும்
அடகு வைப்பான்

ஓ...
கண நேரம்
ஒரு பார்வை
அவனுடைய சுதந்திரம்
இன்று
பறிபோய்விட்டது!

## முதலிரவு!

உள்ளங்கள்
சந்திப்பதைக்காட்டிலும்
உடல் சந்திப்புகளுக்கே
இங்கு
உத்தரவாதம்
அளிக்கப்படுகிறது!!

அச்சம் நாணம்
மடம்
இம்மூன்றும்
போராடிப் போராடி
தோற்றோடிவிட
இதோ தொடங்கிவிட்டது
ஒரு
இருட்டுப் புரட்சி!!

- கனவுகளில்
கண்ட
தி(ரு)ட்டுப் பிரதேசங்கள்
இந்த சிறிய
வெளிச்சத்தில்
சூறையாடப்படுகின்றன
"இச்சீய்
அசிங்கம்"
என்று
'வாய்' சொல்வதை
'மெய்' செய்கிறது!

சாதியும் மதமும்
ஏழ்மையும்
இங்கே
சமத்துவம் பெருகின்றன!

இருட்டுச்
சங்கீதங்களை
ஊமையாய்
உதிர்க்கின்றன
இதழ்கள்
முத்தங்களாக!

சேலைப் புறக்கணிப்பின்
வேளை
நெருங்கினதும்
அதோ
தொடங்கிவிட்டது
ஒரு
இருட்டுப்புரட்சி!!

# மனைவி!!

அவளுக்கு நான்
பயப்படவில்லை
எனினும்
அவள் கோபிப்பாளே!
என்று பயந்து
அப்படி நடிக்கிறேன்!

அவள்
புன்னகைப்பாள்!
என் மனம்
பொங்கும்
அவள்
அழுது வைப்பாள்
என்மனம்
எதையோ இழந்து
சங்கடப்படும்!

அவுள்
கண்ணசைப்பாள்
எனது தமிழ்
வெடிக்கும்!!

--

அவள்
கடிந்திருப்பாள்
அன்று
உள்ளம் எரிமலையாய்
பொங்கி...
அடங்கிவிடும்!

அவளுக்கு நான்
பயப்படவில்லை
எனினும்
அவள் கோபிப்பாளோ
என்று பயந்து
அப்படி நடிக்கிறேன்!

சண்டை...
சில நாட்கள்
நாய்கள்
நடுத்தெருவில்
நடத்தும் சொற்போர்
வீட்டில் நடக்கும்!

சண்டையின்
முடிவு நெருங்கிவிடும்!
அவள்
அழும்போது!

அவளுடைய
கண்ணீர் வந்து
எனது
வெற்றியை பறிக்கும்
கண்ணீர் அவளது
தோற்பவனோ
நான்!

அவளுக்கு
பயப்படவில்லை நான்
எனினும்
அவள் கோபிப்பாளோ
என்று பயந்து
அப்படி நடிக்கிறேன்!

அதோ
படுக்கை அறை!
எனது
வழக்குகள்
விசாரிக்கப்படும்
இரவு
நீதி மன்றம்!

வழக்குகளை
தொடுப்பவளே
இங்கு
நீதிபதியாகிறாள்!

சிலநாள்
தரைப்படுக்கை
தண்டனைகள்!

சிலநாள்
பாராட்டுரையோடு
முத்தப் பதக்கங்களும்
படுக்கை மேடையில்
பகிர்ந்தளிக்கப்படும்!

அடுப்படி அலுவலகம்
இவளது
ஆட்சிக் கூடம்

அங்குதான்
எனது உயிர்
உத்திரவாதம் பெறுகிறது!

அந்த
வியர்வை முத்துக்கள்
எனக்காக
அவள் சிந்தும்
சின்ன சின்னத்
தியாகங்கள்!

அதுதான்
அவளது அழகு!

அவளுக்கு நான்
பயப்படவில்லை
எனினும்
அவள் கோபிப்பாளோ
என்று பயந்து
அப்படி
நடிக்கிறேன்!

## பிள்ளை!!

அவன்
என்னை விட
இரு மடங்குபுத்திசாலி...

என்
மனைவியை
ஏசும் அளவுக்கு
அவன்
தைரியசாலி!

பாடசாலைகளில்
தலை கவிழ்ப்புகள்
செய்தான்
என்னைவிட
குறைவாக!

பிறகு
கல்லூரி வாசலில்
இடம் கிடைத்து
எனது
வங்கிக்கணக்கு
பாதியாகி...

அவன்
கற்கச் சென்றபோது ...!

தேசியப்பிரச்சினைகளுக்கு
ஊர்வலம் போனான்

திரையரங்குகளில்
அவன் அடித்த
சீழ்க்கை ஒலிகளில்
கல்வியின் குரல்
மங்கிப்போனது'

கல்லூரி முடித்ததும்
வேலை தேடுகிற
வேலையை பார்த்து
மனதுக்குப்
பொருந்தாத..
வேலைக்குப் போனான்
என்னைப் போலவே!

பெற்றமகள்
புதுப்பெண்ணாய்
பூப்பெய்தி
மலர்ந்தபோது
எங்கள் ஊர்
இளைஞர்களிடத்தில்
எனக்கு
ஏகமரியாதை!

ஒரு வழியாய்
அவளுக்குத்
திருமணம்
முடித்ததும்
வேறுகூட்டிற்குப்
பறந்துவிட்டது
அந்த
சிட்டுக்குருவி!

மகனுக்கு
கல்யாணம் நடந்தது!
திருமணச் சந்தையில்
அவனை
ஒருவழியாய்
விற்று முடித்தபோது ..

எந்தன்
ஆசைநாயகி
மாமியாகியிருந்தாள்!

அவளுக்கு
புதிதாய் ஒரு
மகள் கிடைத்தாள்

அப்போது
எனக்கு
வாழ்க்கை கிடைத்தது!

## திண்ணை !

இதுவரை
என்னைத்
தெரியாதவனும்
என்னை
வணங்கினான்!

எனக்குத்
தெரியாதவனும்
என்னை
மதித்தான்!

பெரியபெரிய
மனிதர்கள்எல்லாம்
என்னை
வாயாரப்
புகழ்ந்து தள்ளினர்!

உறவினளான
மனைவியும்
மகனும் மகளும்
வந்தவளும்
கூட
மதிக்கப்பட்டனர்!

ஒலிபெருக்கிகள்
என்னை
பெருங்குடியில்
பிறந்தவன்
என்று
வாழ்த்தின!

தெருக்களில்
அங்கங்கே
சுவரொட்டிகள்
என்னை
விருந்தினனாய் மதித்தன!

ஊரின்
பெரிய ஊர்வலம்
வீட்டை வணங்கியது!

தேசத்தின்
அரசியல் கூட்டம்
என்முன்
மண்டியிட்டது

அடுத்தநாள்
தேர்தலாம்
ஓட்டு கேட்டது!!

சாய்வு நாற்காலி

தேசத்தைப்பற்றி
நான்
கவலைபட்டதில்லை

சமுதாய மாற்றங்கள்
என்னை
பாதித்ததில்லை!
என்னுடைய
வேலையைப்பற்றி
மட்டும்தான்
நினைத்திருந்தேன்
குடும்பம்
எனக்கு இரண்டாம்
தரம்தான்!

முப்பதாண்டு
காலமாய்
என்ன வேலை செய்கிறேன்
என்றே புரியாமல்
வேலை செய்து
அதைப் புரிந்துகொள்ள
முயன்றபோது...

ஓய்வெடுத்துக்கொள்
என்று
ஒதுக்கிவிட்டது
அரசாங்கம்!

எனக்கு வயதானதா!
எனக்கும்
வயதானதா!
எனக்கே தெரியாமல்
எப்படி நடந்தது!

நேற்றுதான்
இருபது வயது
பாலகனாய் நினைத்து
பேருந்து நெரிசலில்
இயக்கம் பெற்றேன்!

இன்று
ஓய்வெடுத்துக்கொள்
என்று
துரத்தி விட்டது
அரசாங்கம்!

## முரண்நகை !

பேரக்குழந்தை
கதையை...
முன்னோர்கள் வடித்த
பழஞ்சரக்கை
தனக்குப் புரியாமலும்
எனக்குப் புரிவதாயும்
[illegible]த்தான்!

பாட்டி
கோயில் யாத்திரை
போனாள்!
நேரப்படி உடல்
மருந்தும்
பெற்றது!

தலையணை
இதுவரை சொல்லாத
கதைகளையெல்லாம்
காதோடு சொல்லிற்று!

சில இரவுகள்
என்னோடு
பலத்த சண்டையிட்டு
உறக்கத்தை
பிடுங்கிக் கொண்டன!

உள்ளம்
சொர்க்கத்தையும்
நரகத்தையும்
கற்பனையில்
'டாக்டர்' பெறும்
அளவுக்கு
ஆராய்ச்சி செய்தது!

உயிலை
அவசரமாய்
தயார் செய்து
கொண்டிருந்தான்
எனது
அன்பு மகன்!!

## பாடை

வழியனுப்பு விழா
விடுதலை இன்று
விடுதலை
இந்த
விசித்திர ஊர்வலம்
ஒரு கதையின் முடிவு!!

'அவர்' என்று
அதுவரை சொன்னவர்
'அது' என்று
அஃறிணையாக்கினர்!

'பாவி' என்று
பாட்டி மட்டும்
சொன்னாள்
அடிக்கடி!

படுக்கை வசதியோடு
சாவூர் செல்லும்
நெரிசலில்லாத
விசேட வாகனம்!

    நள்ளிரவுப் பாடகன்

'இவனா...?'
உத்தமன்
உண்மையான
உத்தமன்
என்றான் கடன்பட்டிருந்தவன்!

'ஊதாரி'
என்றான்
பாதிக்கப்பட்டவன்!

'ஆறேழு கூட
போட்டுத்தரச் சொல்லு'
என்றான்
பாடை செய்தவன்!

'பாவி'
என்று பாட்டி மட்டும்
அடிக்கடி
முணுமுணுத்துக்
கொண்டிருந்தாள்!!

## கல்லறை!

சத்தம் செய்யாதீர்கள்
இங்கொரு
சரித்திரம் தூங்குகிறது!

இப்போது தான்
இவன்
நிம்மதியாய்
உறங்குகிறான்!

உலகின்
இந்த ஒரு
சொத்தை மட்டும்
யாராலும்
அபகரிக்க முடியாது!

சத்தம் செய்யாதீர்கள்
இங்கொரு
சரித்திரம் தூங்குகிறது!

 நள்ளிரவுப் பாடகன்

குளிரும்
வெய்யிலும்
மழையும்
இவனோடு
பழகும் தோழர்கள்
ஆயின!

இவன்
இயற்கையோடு
கலந்து
நிலைத்துவிட்டான்!

இவனை
கெடுத்துக்கொண்டிருந்த
உயிர் என்பது
மாய்ந்த போதுதான்
இவனுடைய
வாழ்வு இங்கே
நிலையானது!

சத்தம் செய்யாதீர்கள்
இங்கொரு
சரித்திரம் தூங்குகிறது!

தொடக்கமும்
முடிவும் தவிர
வேறெதுவும் புரியாத
ஒரு புதினத்தின்
கருவே இங்கு
அடைபட்டுவிட்டது!

உலகிற்கு
எதையுமே
உரைக்காத
ஒரு
வெற்றுத் தத்துவம்
இங்கே
மௌனமாக
புலம்பிக்கொண்டிருக்கிறது

சத்தம் செய்யாதீர்கள்
இங்கொரு
சரித்திரம் தூங்குகிறது!

## கிழக்கில் அஸ்தமித்தவை!

அவனுடைய கையை
அவள்
அன்போடு
சிறையிட்டிருந்தாள்!

கண்களால் கலந்தவர்கள்
கடிதங்களால்
இன்று
கைகளால் கலந்துவிட்டார்கள்!
உள்ளத்தால்
கலந்த பின்பே
இவை நடந்தன!

தேசம்
விலைவாசியைப்பற்றி...
சமத்துவத்தை...
சாதியைப்பற்றி
விடாமல்
கவலைபட்டு
விவாதம் செய்தது!

இவர்கள்
அடுத்த சந்திப்பை
அன்பை ..
விவாகத்தைப் பற்றி
விவாதம்
செய்துகொண்டனர்!

சமத்துவத்தை
ஒலிபெருக்கிகள்
தேசமெங்கும்
முழங்கித்தீர்த்தன!

சாதிகளை
மதங்களை ஒழிக்க
நாடே
உறுதி பூண்டது!

ஆனாலும்
சாதி சங்கங்கள்
தங்கள்
சாதியை வளர்க்க
உறுதி பூண்டதை
வானொலி சொன்னது!

சாதியொழிப்பு
மாநாடு நாடெங்கும்
நடத்தப்பட்டபோது...

இவர்கள்...
இல்லத்துத்
துரோகிகளால்...
தூற்றப்பட்டு
சாதிச்சிறையில்
ஆயுட் கைதிகளாயினர்!

இறுதியாக
அதோ!
தேசத்தின் இரண்டு
இளைய சூரியன்கள்
அஸ்தமிப்பதற்காக...
கடலை நோக்கி
நடந்துகொண்டிருக்கின்றன!

அவனுடைய கையை
அவள்
அன்போடு
சிறையிட்டிருந்தாள்!!

## நேற்றிரவு கனவில்!!

நேற்றிரவு
கனவில் உன்னோடு
மனம் விட்டுப்
பேசிக்கொண்டிருந்தேன்!

உன்னுடைய
ஒவ்வொரு பார்வைக்கும்
ஒவ்வொரு
கவிதை எழுதியிருப்பதை
உன்னிடம் சொன்னேன்!

உனக்காக
உள்ளத்தை வெற்றிடமாக்கி
காத்திருப்பதையும்
சொன்னேன்!

வெகுநேரம்
உன்மேல் எனக்குள்ள
மயக்கத்தை
உன்னிடம் உணர்த்தினேன்!

 இரா. நடராசன்

உயிரை
உனக்கு அடகு
வைத்ததையும்
ஒரு கவிஞனின்
காதலியாய் உன்னை
உலகம்
புகழ இருப்பதையும்
உன்னிடம் செப்பினேன்

நேற்றிரவு
கனவில்
நிலா முற்றத்தில்
உன்னோடு
மனம் விட்டுப்
பேசிக்கொண்டிருந்தேன்!
ஆனால்
அப்போதும்
நீ என்னிடம்
பேசவே இல்லை!

## ஒரு வியாபாரம்!

என்னை உன்னிடம்
விற்றபோது
நீ
உன்னை என்னிடம்
விற்றல்லவா
என்னை வாங்கினாய்?

இது வியாபாரமா
பண்டமாற்றா?
உனது
விழிகளை பார்த்தபோதுதான்
எனக்கும்
விழிகள் இருப்பதை
புரிந்துகொண்டேன்;

தினமும்
எனக்காக
உனது முகம்
மலர்வதை நோக்கித்தான்
எனது முகமும்
மலர்ந்திருப்பதை
உணருகிறேன்!

உனது
உணர்ச்சி மிகு
சோகத்தை
பார்த்தபோதுதான்
நானும்
சோகமாய்
இருப்பதை உணருகிறேன்!

நீ என்னை
காதலித்தபோதுதான்
நான் உன்னை
காதலிப்பதை உணர்ந்தேன்!

அன்பே
மொத்தத்தில்
நானும் நீயும்
நீயும் நானும் போல...!

## கண்ணே களத்திற்கு வா!

கண்ணே
உன்னுடைய
ஒவ்வொரு பார்வைக்காகவும்
ஒவ்வொரு
கவிதை எழுதினேன்!

விளைவு...
இன்று 'கின்னஸில்'
இடம்பெறும் அளவுக்கு...

உன்னை பற்றி
நானெழுதிய
கவிதைகளின் எண்ணிக்கை
உலகத்தின்
பொய்களைவிட
அதிகம்!

ஆனாலும்...
முப்பத்தியொன்பது
வயதிலேயே
ஊன்றுகோலேந்தி
முச்சந்தியில்
பிச்சையெடுக்கிறது
தேசம்!

நடிகை வீட்டு
நாய்க்குக்கூட
இரசிகர் மன்றம் வைத்து
இரத்தம் சிந்துகிறான்
இளைஞன்!!

சாதி நெருப்பிலும்
சந்தர்ப்பவாத
அரசியல் புயலிலும்
இனக்கலவர
இழிவுகளாலும்
பாதி எரிந்துவிட்டது
பாரதம்!!

கலையும்
இலக்கியமும்
விபச்சாரம் நடத்துகின்றன
திரையரங்குகளில்!

காதல்கள்
குறைந்து போய்...
கனவிலும்
கற்பழிப்பே
நடக்கிறது...!

இலஞ்ச லாவண்ய
வெற்றியில்
உண்மையின்
அலறல் கேட்கிறது
தெருக்களில்...

படிப்பறிந்தவனுக்கு
வேலை கொடுப்பதிலும்
சாதிவெறி
சாதனைகள்!

தமிழை அழித்து
துரத்துகிற
ஆங்கிலக் கல்வியின்
அரக்கத்தனம்...!

அந்தோ
தேசம் நிம்மதியை
தெருக்களில்
வீசியெறிந்துவிட்ட
இந்த நேரத்தில்...

காதல்
இனிமையானதுதான்
ஆனால்...
புரட்சி அதைவிட
கோடி மடங்கு
புனிதமானது...

தேசத்தின்
ஈனக்குறல்
'காப்பாற்று காப்பாற்று'
என்று
அலருகிறது..!

கண்ணே
கனவுகளை
புதைத்துவிட்டு
களத்திற்கு வா!!

## நெருப்பில் விழுந்த தீபம்!

அவள்
எரிந்துகொண்டிருக்கிறாள்
அதோ...
அவள்
எரிந்து கொண்டிருக்கிறாள்

அருந்ததி பார்த்து
அம்மி மிதித்து...
அவனோடு நடந்த
நலுங்கில் வென்று...
கழுத்தில் அவனிட்ட
மஞ்சளை சுமந்து
இன்னமும்
இரண்டாண்டு
முழுசாய் முடியவில்லை!!

அவள்
எரிந்து கொண்டிருக்கிறாள்
அதோ
அவள்
எரிந்து கொண்டிருக்கிறாள்

ஆசையாய் சமைப்பாள்
உண்டுகளித்து
அவனெழுந்த பிறகு
அந்த
எச்சிலை உண்டாள்!

விரும்பியபோதெலாம்
உடலையும் கொடுத்து
பேர் சொல்ல ஒரு
பிள்ளையை சுமந்தாள்...!

ஆனால்
அவள்
எரிந்துகொண்டிருக்கிறாள்
இன்று
அவள்
எரிந்துகொண்டிருக்கிறாள்.

எண்பத்துப் பவுனில்
ஒன்பதுதான்
குறைந்தது!

ஆறு மாதத்தில்
தருவதாய் சொல்லி
மீளா உலகுக்கு
பெற்றவர் போனார்!

கொஞ்சலும் அவனது
கெஞ்சலும்
சூடு போடுகிற
சூட்சமாய் மாறிட.... பாவி

மண்ணெண்ணெய்
வாங்கியதே
மாமனார் பணத்தில்தான்!

அவள் எரிந்துகொண்டிருக்கிறாள்
அதோ
அவள் எரிந்துகொண்டிருக்கிறாள்

தோழி. எனது
பக்கத்து வீட்டு
வாசகியே...
புரட்சி செய்வாய்
என்றிருந்தேன்!

கவிதைக்கு
வரட்சிதந்து
போனாயே!

இதோ
மௌனமாய்
அழுகின்றன... நீ
விரும்பியக் கவிதைகள்!

தேவி...
பொங்கிவரும் புரட்சியில்
ஒரு நாள்
அந்த அரக்கர் கூட்டம்
மடிந்து போகும்

ஆனால் அதுவரை
கும்பிட்டுக் கேட்கிறேன்
தாயே
ஆண்களை மன்னித்துவிடு !!!

✽ ✽ ✽



ஒரு பேனாவிற்குப்
பைத்தியம் பிடித்திருந்தது

'புரட்சி' புரட்சி'
என்று
புலம்பிக்கொண்டிருந்தன
உதடுகள்

நள்ளிரவுகளிலும்
பகல் கனவு காண்கிறது
தேசம்...
அந்தக்
கனவுகளுக்கும்
கால்கள்
முறிந்தபோது

அதோ...
புறப்பட்டு விட்டான்
ஒரு
நள்ளிரவுப் பாடகன்!!

...உள்ளே